உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## எட்டிகுடி

# முருகன் பிள்ளைத்தமிழ்.









அருள்மிகு

**சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்,**

**எட்டிகுடி,** நாகை வட்டம்.

**விலை ரூ. 1—25.**




உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்,

# எட்டிகுடி
# முருகன் பிள்ளைத்தமிழ்.

ஆக்கியோர்:

கவியரசு - வித்துவான்

கோவை கு. நடேச கவுண்டர் P.O.L., அவர்கள்,

தலைமைத் தமிழாசிரியர், நகராண்மைக்கழக உயர்நிலைப்பள்ளி,

கோயம்புத்தூர்.

எட்டிகுடி அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோயில்

வெளியீடு.

1974

உ

சிவமயம்.

# உள்ளுறை

# முதலாம் பதிப்புரை.

ஸ்ரீ முருகனது சாந்நித்தியம் தெற்றென விளங்கும் தலங்கள் பல உள. அவற்றுள் ஒன்று எட்டிகுடி. வணிக மன்னனுக்கு 'எட்டி' என்ற பெயருண்டு. அதாவது செட்டியிற் சிறந்த ஒருவனை 'எட்டி' என்றழைப்பதுண்டு. முருகப்பிரானுக்கு 'செட்டி' என்றதோர் திருநாமம் உண்டு. சிறப்புற்ற செட்டியாகிய 'எட்டி' குடியிருக்கும் தலம் 'எட்டிகுடி' எனப்பெயர் பெற்றது என்று சொல்லுவது பொருந்தும். இத்தலத்திற்குக் 'காஞ்சிரங்குடி' என்றதோர் பெயருமுண்டு. காஞ்சிரங்காயை "எட்டிக்காய்" என்று வழங்குகிறோம். ஆக 'காஞ்சிரங்குடி' 'எட்டிகுடி' எனப் பெயருடைத்தாயிற்றென்றும் சொல்லுவர் ஒரு சிலர்.

சொல்லொணு மகிமை பூண்ட எட்டிகுடி முருகப் பிரான் மீது ஓர் பிள்ளைத்தமிழ் தக்கோர் ஒருவரைக்கொண்டு வகுக்க வேண்டுமென்பது அடியேனின் அவா. முருகனருளும் பக்கத் துணையாயிருக்க் திருமிகு கவியரசு – கோவை கு. நடேச கவுண்டர் அவர்கள் பிள்ளைத்தமிழ் அமைத்துக்கொடுக்க முன் வந்தார்கள். அவர்கள் பாடிய பாடல்களே, எட்டிகுடி முருகன் பிள்ளைத்தமிழாகும். ஏற்கனவே 'மங்கையர்க்கரசி பிள்ளைத் தமிழ்' என்ற பிரபந்த நூற்பகுதி யொன்றை அமைத்து, உருவாக்கியுள்ளார்கள். நூலாசிரியர் பக்தி ததும்ப, எளிய நடையில் உருகிப்பாடி முருகன் அடியார்களைப் பரவசப் படுத்துகிறார்கள்.

ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி
தேவஸ்தானம், எட்டிகுடி.
19—10—1947.

T. H. விவேகானந்தம் பிள்ளை,
B.A., L.T.,
மாஜி நிர்வாக அதிகாரி.

# இரண்டாம் பதிப்புரை

உலகெலாம் வாழ உயிரினுள் உயிராய் இலங்கும் இறைவன் எழுந்தருளியுள்ள இடங்கள் பல. அருணகிரிநாதர் முதலாயினோர் ஆண்டவன் புகழ்பாடி தன்னருள் பெற்றுள்ளனர்.

எத்திக்கும் புகழ் மணக்க, எட்டிக்குடியினிலே ஈராறு கரமும், ஓராறுமுகமுங் கொண்டிலங்கும் ஒப்பற்ற திருமுருகன்மீது பாடப்பெற்ற எட்டிகுடி முருகன் பிள்ளைத்தமிழைத் தாமும்பாடி எண்ணிய எண்ணமெலாம் ஈடேற, இன்னருள் பெற எளிதாய், மீண்டும் அச்சியற்றித்தர வேண்டுமென்ற அன்பர்கள் பலரின் வேண்டு கோட்கிணங்க அச்சிடப்பட்டுள்ளது. இப் பிள்ளைத்தமிழை அனைவரும் பெற்று வாயார துதித்துப்பாடி உளமார போற்றி திருமுருகன் அருள்பெற வேண்டுகிறேன்.

எட்டிகுடி,
7—2—1974.

G. சோமசுந்தரம் B.Sc.,
செயல் அலுவலர்.

# முன்னுரை

---

## பிள்ளைத் தமிழ்ப் பிரபந்த விளக்கம்.

தமிழிலக்கிய நூல்களைப் பேரிலக்கியம் சிற்றிலக்கியம் என இருவகையாகப் பிரித்துள்ளனர் முன்னோர். அவற்றுள் சிற்றிலக்கியத்தில் அந்தாதி, கலம்பகம், உலா, அம்மானை, மணிமாலை முதலிய 96 வகையான பிரபந்தங்களைச் சேர்த்துள்ளனர். பிள்ளைத்தமிழ் என்பது அவைகளுள் ஒன்று.

பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தம் என்பது கடவுளரையோ அல்லது மக்களுள் சிறந்தவரையோ பிள்ளைமைப் பருவத்தில் வைத்து-அதாவது குழந்தையாகப் பாவித்து—அக்குழந்தை அவ்வப்போது பெற்றோர் உற்றோர் பெரிதும் மகிழுமாறு செய்யும் செயல்களைப் பாராட்டும் நூல் ஆகும். அவ்விதம் பாராட்டும் போது அந்நூலை ஆக்கியவன், தான் போற்றும் தலைவன் அல்லது தலைவியின் பண்பு, அறிவு ஒழுக்கங்களை ஆங்காங்கு புலப்படுத்தி, சொல் நயம் பொருள் நயம் பொருந்தப் பாடுவான்.

இப்பிள்ளைத்தமிழ் பிள்ளைப் பிரபந்தம் பிள்ளைக்கவி எனவும் கூறப்படும். ஆடவரைப் பற்றிக் கூறுவது ஆண்பாற் பிள்ளைத்தமிழாம்.

* ''முத்துக்குமாரசுவாமிப் பிள்ளைத் தமிழ்'' போல்வன கடவு(க)ளைக் குழந்தையாகப்பாவித்து எழுதிய ஆண்பாற் பிள்ளைத் தமிழாம். †''சேக்கிழார் பிள்ளைத்தமிழ்'' இது மக்களுள் சிறந்தாரைப்பாடியது. பெண்மக்களைக்குறித்துப் பாடுவது பெண்பாற் பிள்ளைத்தமிழ். மதுரை அங்கயற் கண்ணம்மையைத் துதித்துக் குமர குருபரர் பாடிய ''மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்'' இவ் வகையைச் சார்ந்தது.

பிள்ளைப் பிரபந்தம் பத்துப் பருவங்களை யுடையது. அவை: காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலிப்பருவங்கள் இவ்வேழுப் பருவங்களும் இருவகைப் பிள்ளைக் கவிக்கும் பொது. இதன்பின் ஆடவற்கானால் சிறுபறை, சிற்றில், சிறுதேர்ப் பருவங்களைச் சேர்த்துப் பத்தாகவும், பெண்டிர்க்கானால் கழங்கு அம்மானை, ஊசல் என்ற பருவங்களைச் சேர்த்துப் பத்தாகவும் வைத்துப் பாடுவது மரபு. ஒவ்வொரு பருவமும் பத்துப் பத்துப் பாடல்களையுடையது. காப்புப்பருவம் பதினொரு செய்யுட்களால் பாடப் படுவதுமுண்டு. இச் செய்யுளெல்லாம் ஆசிரிய விருத்தத்தால் அமையும்.

---

*குமரகுருபரசுவாமிகள் புள்ளிருக்கு வேளூர் என்ற வைத்தீஸ்வரன் கோவிலில் எழுந்தருளியிருக்கும் முத்துக்குமர சுவாமியைப் பாராட்டும் நூல்.

†பெரியபுராண ஆசிரியர் சேக்கிழாரைப்பற்றித் திருச்சிராப்பள்ளி மகாவித்துவான்-மீனாட்சிசுந்தரம் பிள்ளையால் ஆக்கப்பட்டது.

1. காப்புப்பருவம்:— கவி, தான் பாராட்ட எண்ணிய தலைவன், அல்லது தலைவியைக் காக்குமாறு நூலுக்கு ஏற்புடைய கடவுளையோ, தான் வழிபடும் கடவுளையோ துதிப்பது. இப்பகுதியில் குழந்தையின் மூன்றாவது மாதச் செயல்களை வைத்துப் பாராட்டுவது மரபு.

2. செங்கீரை:— குழந்தையின் ஐந்தாம் மாதம் வரையுள்ள செயல்களை வைத்து இப்பகுதியில் கூறப்படும். இளையகீரை தலைநிமிர்ந்து மெதுவாகக் காற்றில் அசைவதைப்போல் குழந்தையும் தலையை மட்டும் தூக்கி இப்புறமும் அப்புறமும் மேலும் கீழும் அசைவதால் இப்பகுதி செங்கீரைப் பருவம் என்னப்பட்டது.

3. தாலப்பருவம்:— 7 மாதமான குழந்தையின் விளையாடல்களைக் குறிப்பதோடு தாலாட்டுவதாக அமைக்கப்படும் இப்பருவத்தில்.

4. சப்பாணிப் பருவம்:— எழுந்து உட்காரும் ஒன்பது திங்கள் பருவக் குழந்தை ஏதாவது சிறு செயல் செய்து கைகொட்டி மகிழ்ந்து ஆர்ப்பரிக்கும். இதையே சப்பாணி கொட்டுதல் என்பர்.

5. முத்தப்பருவம்:— குழந்தையிடம் முத்தம் தருமாறு வேண்டப்படும் இப்பகுதியில். இது 9 மாதப் பருவத்தில் கூறுவதாகும்.

6. வருகைப் பருவம்:— இதனை வாரானைப்பருவம் எனவும் கூறுவர். குழந்தையைத் தன்னிடம் வருமாறு கூப்பிடுவது. 13 மாதப் பிள்ளையைப் பற்றிக் கூறுவது இப்பகுதி.

7. அம்புலிப் பருவம்:— இது 15 மாதக் குழந்தை யாகக் கருதிப் பாடப்படும். இதில் வானத்தில் விளங்கும் அம்புலியைப் பிள்ளைக்குக் காட்டி அக் குழந்தையோடு விளையாட வருமாறு சந்திரன் அழைக்கப்படும். அவ்வாறழைக்கும்போது சாம, பேத, தான, தண்டம் என்ற நால்வகை உபாயத் தையும் அனுசரிப்பது புலவர் வழக்கு. தன் பாட்டுடைப்பிள்ளையின் பெருமையைக் குறிப்பது சாம உபாயம். பின்னர் இருவர்க்குமுள்ள வேறு பாட்டை எடுத்து இயம்பிச் சந்திரனிலும் குழந்தையே பெரியதென நிலைநாட்டி உயர்ந்தவ ரோடு விளையாட வரவேண்டுமெனத் திங்களைக் கூப்பிடுவது பேத உபாயம். அதன்பின் அக் குழந்தையோடு விளையாடுவதால் பல நன்மை களைப்பெறலாம் என்று கூறுவது தான உபாயம் முடிவில், விளையாட வராவிடில் குழந்தை சபித்து விடும் என்றோ வேறு விதமாகவோ தண்டிக்கும் என்றோ பயமுறுத்துவது தண்டோபாயம் ஆகும்.

8. சிறுபறைப் பருவம்:– 17 மாத ஆண் குழந்தை யைப் பற்றிப் பாராட்டுவது. இப்பருவத்தில் குழந்தை தனக்குக் கிடைத்த பொருளையெல்லாம் எடுத்துப் பறை கொட்டுவதுபோல் தட்டி மகிழ் வது இயல்பு. அந்நிகழ்ச்சியை இப்பருவத்தில் கூறுவர்.

கழங்குப் பருவம்:— 17 மாதப் பெண் குழந்தை யைப் பாராட்டுவது. கழற்சிக்காய்களை வைத்து விளையாடுவதாகக் கூறப்படும். இப்பருவத்துக் குப் பதில் நீராடல் பருவத்தைச் சேர்ப்பதுமுண்டு

9. **சிற்றில் பருவம்:—** 19 மாத ஆண் குழந்தைகளைப் பாடுவது. மண்ணில் சிறு வீடு கட்டி விளையாடுவதும் தன்னுடைய சிறுவர்களின் வீட்டை அழிப்பதும் பிள்ளைச் செயலாகும். சிறு பெண் ஒன்று தன் வீட்டை அழிக்க வேண்டாமென்று வேண்டுவதுபோல் இப்பகுதியில் பாடப்படும்.

**அம்மானைப் பருவம்:—** 19 மாதப் பெண் குழந்தையின் செயலைப்பாடுவது. அம்மானை ஆடி விளையாட முற்படுவது இப்பருவக் குழந்தையின் இயல்பு.

10. **சிறுதேர்ப் பருவம்:–** 21 மாத ஆண் குழந்தையைப் பற்றியது. இவ்வயதில் குழந்தை, குரும்பை, நுணுக்காய் போன்ற பொருள்களைக் கொண்டு தேர்கட்டி இழுத்து மகிழ்வதும், நடைத்தேர் (நடை வண்டி) உருட்டுவதும் இயல்பு: இதனைக் குறிப்பர் இப்பகுதியில்.

**ஊசல் பருவம்:-** 21 மாதப் பெண் குழந்தையைப் பற்றியது. மரம் அல்லது உத்தரத்தில் கயிறு கட்டித் தொங்கவிட்டு அதில் ஏறி அமர்ந்து ஆடுவது அல்லது ஊஞ்சல் ஆடுவது. இச்செயல் பாராட்டப்படும் இப்பருவத்தில்.

மேற்குறித்த வயதுகளையன்றி 3, 5, 7வது வயதுகளில் இச்சம்பவங்கள் நடப்பதாக வைத்துக் கூறுவதும் உண்டு. இங்குக் குறிக்கப்பட்ட பருவச் செயல்கள் இயற்கையில் சிற்சில மாறுபாடாகக் காணப்பட்டாலும் பெரும்பான்மை ஒத்துவருவதால் நூல்களில் இவ்விதமே கையாளப்படும்.

வித்துவான் **சண்முக தேசிகர்,**
போர்டு உயர்நிலைப்பள்ளி, திருத்துறைப்பூண்டி.

சிவமயம்.

# சாற்றுக்கவிகள்

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பூமணக்குந் திருமகளு நாமணக்குங் கலைமகளும் பொருந்தி வாழ
மாமணக்குங் குயிலினங்கள் வணமணக்கும் அருணகிரி வழுத்துஞ் செய்ய
பாமணக்குஞ் சந்தநலம் படிமணக்கும் படிபாடப் பயிலு மஞ்சார்
காமணக்குங் கலபமயில் களிமணக்கு நடம்புரியக் கவினு முதூர். 1

காணவினிக் குங்கேட்க மிகவினிக்குஞ் சொலவினிக்குங் கருதி நெஞ்சம்
பேணவினிக் குந்தெவிட்டா தெப்போதுந் தானினிக்கும் பிறவா வண்ண
மாணவளிக் கும்பரம வமுதுகுடி கொண்டிருக்க மதியின்வல்ல
வாணரெலாம் பேரன்பி னெட்டிகுடி யெனப்பரவி வாழ்த்து முரால். 2

பிள்ளையென மதியாது குட்டுண்டு சிறையுண்ட பிரமன் ருேற்றங்
கொள்ள வெள்கு மறைநாலு முகனுக விந்நகரங் கோயில் கொண்ட
வள்ளலருண் முருகனையோர் பிள்ளையென வேமதித்து வழங்கி ருனுல்
தள்ளரிய பேரின்பங் கொள்ளைகொள்ள வியன்றபிளளைத் தமிழ்நூ லம்மா 3

இன்னவன்யா வன்னெனிலிந் நாடுதமி ழிறையவர்க ளினிதி னேம்ப
மன்னுநலம் வாய்ந்திருப்பின் வருகவெங்கள் கவியரசு வருக வென்று
முன்னரெழுந் துவந்தெதிர்கொண் டழைத்தரியா சனமிருத்தி முகமன் பேசும்
அன்னபெருந் தகைமையுளான் மனக்கினிய னெனக்கென்று மன்பன் மாதோ 4

மங்கையர்க்க ரசிபிள்ளைத் தமிழ்பேரூர்க் கலம்பகநீர் வயல்கள் சூழ்ந்த
பங்கயத்த டப்பழனி முருகர்மயில் விடுதூதுப் பாட னூலும்
பொங்கருட்க விச்சேக்கி ழார்பிள்ளைத் தமிழுக்குப் புலமைமேவ
இங்கெவர்க்கு மெட்டாத பொருளெட்ட உரைநூலு மெழுதி யீந்தான் 5

சொன்னோக்கும் பொருனோக்குந் தொடைநோக்கு நடைநோக்குந் துகளிலாத
பன்னோக்கு நனிநிரம்பப் பலபாட லொருநொடியிற் பாட வல்லான்
மின்னோக்கு நுண்ணிடையாள் பங்கனடி வழிபாடே விரும்பு நெஞ்சன்
தன்னேக்கந் தமிழ்தழைப்பச் சைவநெறி தான்றழைப்பச் சார்வ தானுன் 6

இருபுனலு முயர்மலையும் வருபுனலும் வல்லாணு மெல்லா மோங்கும்
பெருமைதரு முறுப்பாக விளங்கு கொங்கு நாட்டினிலே பிறங்குங் கோவைத்
திருநகரில் வேளாளர் மரபில் வந்தா னவன்பேரைத் தினம்புகழ்ந்திங்
கொருமுறையோ பலமுறைந டேசனென்று வாயார வோது வோமே. 7

தாராபுரம் - நா. ஆறுமுகம் பிள்ளை.

2

முருகன் கழலிணை
உருகன் பொடுபணி.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மட்டவிழ்பூங் கடுக்கைபுனை கண்ணுதலான் மகிழ்ந்தீந்த மைந்தன் கந்தன்
இட்டமுடன் உவந்துறையும் எழிற்றளிகள் பலவவற்றுள் ஏற்ற மிக்க
சிட்டர்புகழ் எட்டிகுடிச் செவ்வேள்பிள் ளைத்தமிழ்நீ செப்பு கென்று
கட்டழகன் விவேகானந் தக்குரிசில் கனிவினொடுங் கட்டு ரைக்க. 1

அவ்வுரைசீ ரியதென்ரு ளுடையபிள்ளை அடிமலர்க்கே அன்பு பூண்டோன்
செவ்வியபண் பின்னிசையால் திசைபோய கோவையினன் திகழ்வே ளாளன்
ஒவ்வுதலில் அத்துவித சித்தாந்த உண்மைதெரி உரவோன் யார்க்கும்
ஔவியமில் செம்மல்தமிழ்க் 'கவியரசு' நடேசனெனும் அபிதா னத்தன் 2

திருமுறையைப் பண்ணேடும் சிந்தைநெகிழ்ந் திடவோதும் செல்வன் சைவன்
வரன்முறையே மாணவர்கட் கியற்றமிழை வரையாது வழங்கும் வள்ளல்
பரவுபுகழ்ச் சென்னைப்பல் கலைக்கழக 'வித்துவான்' பட்டம் பெற்ருன்
துருவியடை தருந்தகைமை யானென்றுந் துப்புரவில் தொலைவில் லாதோன் 3

எட்டிக்குடி முருகன்பிள் ளைத்தமிழை எந்நலமும் இலங்கச் செய்து
சுட்டுடைய சாலிசகம் ஆயிரத்தெண் ணூற்றெழுபான் தொடர்ந்த ஆண்டு
வட்டமுறும் சருவசித் தானியள கார்சோம வாரந் தன்னில்
சட்டகம்தேய் மதிதிதிபன் மூன்றில்எட்டி குடியிறைமுன் தகைசா லன்பு 4

பொங்கிவழி அடியவர்கள் அழகழகென் றகமகிழ்வு பூத்துப் போற்ற
மங்குல்தவழ் கோயமுத்தூர்க் குமாரசுவா மிக்கவுண்டர் வரத்தின் வந்த
இங்கிதம்சேர் நடேசனென திருவிழியின் மணியனையான் எதிரில்லாதோன்
மங்கலமா வரங்கேற்றி ஞனவன்பல் நலமுமுறீஇ வாழ்க மன்ரே 5

நேரிசை வெண்பா.

எட்டி குடிவாழி ஈசன் கழல்வாழி
மட்டி லருள்வாழி வான்வாழி-சிட்டரெலாம்
பேசு நடேசன்செய் பிள்ளைத் தமிழ்வாழி
காசினியோர் வாழி களித்து.

R. S Puram P O
Coimbatore,
9—6—1947.

C. S. சொக்கலிங்கம் பிள்ளை.

3

## கட்டளைக் கலித்துறைகள்.

எட்டி குடிமுரு கப்பெரு மானின் இணைப்பதத்தே
கட்டிக் கரும்புசெந் தேனறு நெய்யுங் கலந்தசுவை
கொட்டிக் குழைத்ததொர் பிள்ளைக் கவித்தொடை கோத்தணிந்தான்
குட்டித் தமிழடி யேன்களி கூர்ந்து குதித்திடவே. 1

ஏதொன்று கேட்பினு மெம்போல் பவர்க்கு மிதன்பொருளிங்
கீதென்று செப்புங் கவியர சாய எழினலத்தான்;
வாதொன்றும் இல்லான்; முனம்பழ னுதியன் மஞ்ஞைவிடு
தூதொன்று சொல்லிய கோவை நடேசனென் சொல்வலனே. 2

கோவை - கணபதி - க. கி. குமாரசிவனுர்

4

## அறுசீர் விருத்தங்கள்

ஒட்டு, குடிலக் கரகத்து முத்த மாங்க மீதி லொளி
சொட்டு குடிலக் கண்ணுநதி துவன்றுஞ் சீடர் தமைப் போன்று
கட்டு குடிலைப் பொருளையன்பார் கவுமா ரர்கள்பெற் றின்புநிலை
எட்டுகுடியாக் கிடுமுருக னெட்டி குடியாந் தலமம்மா 1

பழவித் தமிழ்த மயக்குடிலைப் பாலாம் பொருளை யார்வத்தால்
மழவித் தமிழ்தன் வாய்க் கேட்டு மகிழ்ந்த நடேசன் போன்றுகலைக்
கிழவித் தமிழ் நடேசன்வாய்க் கிளவி யாய்த்தன் பெயர்தோற்றக்
குழவித் தமிழாக் கினனெட்டி குடிவாழ்ப் பிள்ளைப் பெருமாளே. 2

கோவை யிசையும் வேள்ள குலத்த னுகி யெட்டுகுடிப்
பாவை யிசையுமி கத்துடனே பரத்தை யிசைநற் பத்தியுளக்
கோவை யிசைத்து வேளாளக் குணமும் படைத்தே யெட்டிகுடிப்
பாவை யிசைத்தா னன்கதிற்றேம பாகை யிசைத்தான் மிகமாதோ. 3

தத்ததன தானந் தய்யத் தானன.

சத்தமறை மானுஞ் சையப் படிநேர்
தத்துவ மதீதந் தெள்ளித் தருசேய்
இத்தரையி லார்வங் கொள்ளற் புதமார்
எட்டிகுடி வேலன் துய்மைத் துதிதோய்
புத்தருள மூறுங் கள்வித் தகர்நா
பற்றுமனி யார்பண் துள்ளத் தருதாய்
வித்தமலி கோவன் செல்வப் பதிவாழ்
விற்பன நடேசன் பிள்ளைக்கவியே.

கந்தசாமி சுவாமிகள் கௌமார மடாலயம்
சிரவணபுரம்

உ
சிவமயம்.
திருச்சிற்றம்பலம்.

# எட்டிகுடி

# முருகன் பிள்ளைத் தமிழ்.

"நறவ மார்பொழிற் புறவ நற்பதி
யிறைவ னுமமே மறவ னெஞ்சமே"—சம்பந்தர்.

## தரவுகொச்சகம்.

தன்பாட்டுக் கிணையில்லாச் சம்பந்தன் ருள்போற்றி
இன்பாட்டுத் திருப்பொதுவி லியற்றுமடி யிணைபோற்றி
என்பாட்டுக் கிருந்தாலு மின்பாட்டுக் கொண்டருளி
அன்பாட்டு மெட்டிகுடி யமர்வேல னருள்போற்றி.

## நூல்

### விநாயக வணக்கம்.

பொன்பூத்த கொன்றையந் தொங்கலும் திங்களும்
பொங்கர வுடன்கங்கையும்
பொதிகின்ற புரிசடை யினுன்முப் புரஞ்செற்ற
புண்ணிய னுருக்காட்டியும்
கொன்பூத்த வங்குசம் பாசம் பிடித்தகை
குலவிமய மகடன் உருவம்
குலவிடக் காட்டியும் தந்தைதா யுருவான
குஞ்சரனை நெஞ்சில் நினைவாம்
தென்பூத்த பழமறை சதாசிவோ மோஞ்சுப்ர
மணியவோ மென்றுசெப்பும்
செம்பொருள தாயைந்து முகமோ டதோமுகந்
திகழுமறு முகவழகனுய்
மின்பூத்த ஞானவடி வேல்ஏந்தி யன்பருள்
விளங்கும்ஆ னந்தவாழ்வை
மிக்கவள முறுமெட்டி குடிவளரு முருகனை
விளம்புபைந் தமிழ்தழையவே.

## 1. காப்புப் பருவம்

### திருமால்

பெருந்தே னிறைக்கு நறைக்கமலம்
பிரியா மாத ரிருவிழியாப்
பிறங்கு முமையா ளுருவாகிப்
பெருமான் பாகம் பிரியாமல்
இருந்தே யுலகம் புரந்தருளும்
இலங்கு மாழிப் படையானை
இம்மைச் சீவன் முத்திதரும்
எங்கள் சைவ முதற்குருவை
மருந்தே ரமரர் தமக்குதவும்
வண்மை மாருக் கருமுகிலை
வணங்கிப் புகழ்வாம் தனக்கினிய
மருக னுன முருகோனை
அருந்தே னூர்க்கும் பொழில்புடைசூழ்
அழகா ரெட்டி குடியமர்ந்த
அமரர் சேனுதியான
அண்ணல் வேளைப் புரக்கெனவே. 1

### சிவபெருமான்

சீதநி லாமத மத்தமெ ருக்கறு காறிள வரவமொடே
தேசமர் வேணிமுடித்தவன் முக்கதிர் சேர்விழியுடையவனீள்
சீகர வாரிதி கக்குவி டத்தைவி டாதுமி டறிலுறவே
சேர்சுவை நாவல்ப முத்தக னிக்கிணை யாநுகர் கிருபையினுன்
வேதன்மு ராரிமு னிற்றவ ரெற்பொடு தாதகி விரவியதோள்
மீதொரு நீள்கன கச்சிலை வைத்திடு வீரனை யுறுசினமால்
வேதிய ரேவுத ரக்கொடு கைக்கிரி கீறத னுடையவன்வான்
வீசிய தேசமர் சிற்சபை யிற்பர மேசனை யடிபணிவாம்
வாதனை யேதுமி னற்றவர் துய்த்தப ராவமு தினையளவா
வாழ்வுறு மாருயி ருட்டக ரக்குகை வாழ்வள மிகுமொளியாய்

மாதவ மீறும கத்திய னுக்கொரு வாகச முஜைகுருவாய்
மாகடன் மேலுறு கொக்கைவ தைத்தொளிர் வேலனே யடிபணிவார்
ஏதமி லாதுய வைத்தருள் நற்றெழி லாளனை யிமையவர்கோ
னீனும காநுப வக்கொடி சுற்றிய தோளனை யிறவுளர்மான்
ஏர்மிகு பாதமு டிக்கணி யக்களி மேவிடு விரகனைநீள்
ஏடவிழ் காமலி எட்டிகு டிக்கும ரேசனை யருள்கெனவே. 2

## சிவசத்தி

எண்ணரிய பல்லுயிர்கள் தனுகரண புவனமிவை
எய்தியிரு வினையொழித்திட்
டிறுதியறு பரமசுக வீடெய்த வென்றுவெளி
யேயெம்பி ரான்செய்நடனம்
தண்ணளியின் மகவுநுக ரருமருந் தினையருட்
டாய்நுகர்ந் தூட்டுமமுதத்
தானீவல் போற்கண் டுயிர்க்கின்பு தருபரா
சத்திபத பத்மநினைவாம்
தண்ணுமை முழக்கமத குறுபுனல் காட்டச்
சகோடயாழ் வண்டுகாட்டத்
தத்தைதமிழ் பாடமட வன்னமுத லாம்பறவை
தாமிருந் தினிதுகேட்ப
நித்திலம் புன்னைசெம் பொன்கொன்றை சொரியவள
நிலவுபொழி லெட்டிகுடிவாழ்
நிமலவறு முகசிவனை நினையுமடி யவர்துணையை
நிதமும் புரக்கவெனவே 3

## விநாயகர்

முனைமுக மெதிர்ந்தகய முகனுடல் பிளந்தசுரர்
முடியவொரு கோடுறுத்தி
மூதண்ட கூடமு மறைத்திடு பிணக்குவியல்
முளியவிழி யழலையுய்த்துப்

பணையணைய கரமுமிரு கவுளும்விடு நீராற்
பறந்தலையை யளருசெய்து
பற்றலர் குலக்கரு வறுத்துக் கொடுஞ்செயல்
பழுத்தச்ச மூட்டு மியல்பும்
தினையளவு பத்தியுடை யவர்களுக் குஞ்செய்த
தீவினையை வேர்பறித்துத்
திருவருள் மதம்பொழிந் தருளியல்பு முடையநற்
சித்தியைங் கரவேழமே
நனைமலர்கொ டுனதுபரி புரசரண நளினமெந்
நாளும் புகழ்ந்துதொழுவேம்
நட்புமிகு நும்பியை எட்டிகுடி நம்பியை
நயந்துகாத் தருள்புரிகவே. 4

## திருநீறு

ஞானவன லாற்பசுவின் மலநீறி னமலமாம்
ஞாயத்தை யறிவுறுத்தி
ஞானியர்கள் திருமேனி மேன்மிளிர்ந் தறிவிலார்
நாட்டந் திகைக்க லாற்றிக்
கானமறை யுண்மாசு கழுவுவதெ னப்பகர்
கட்டுரைப் பொருளுமாகிக்
கடவுள்கண் மணியினுறு துணையான நீறெனும்
காப்புமுறு காப்பாகவே
மீனவ னழற்பிணி தவிர்த்துடற் கூனீவி
வெஞ்சமண விருளகற்றி
வேதநெறி சைவநெறி தழையவரு வேணுபுர
வேதியர்சி காமணிக்குத்
தானதரு மங்கள்சலி யாதுபுரி வார்குடி
தழைந்துசை வம்பொலிந்து
சட்டகலை யெட்டெட்டு முற்றுவள ரெட்டிகுடி
சார்குமர வேளினுக்கே. 5

## திருவைந்தெழுத்து

வேத நான்கின் மெய்ப்பொருளாய்
வீட்டி னெறியை விளக்குவதாய்
விளம்பு மறைகட் கரசாகி
விண்ணு மண்ணு மெண்ணுவதாய்க்
காத லாகி யோதுபவர்
கடனேர் பிறவி கடத்துவதாய்க்
கடையே னுளத்தும் பயில்கின்ற
கடவு ளெழுத்தைந் தும்புரக்க
சீத வேரி மலர்க்கணைகொள்
சித்த சன்மைத் துனவேளைத்
திருமா லருமை மருமகனைத்
தேவர் மணவா ளனைமைந்தர்
மாதர் காதன் மக்களொடு
மறவா தேத்த எட்டிகுடி
வாழுந் தோகை மயின்மீது
வருமெய்ஞ் ஞானக் குருந்தினையே. 6

## உருத்திராக்கம்

விண்மணியை யோருருவாக் கொண்டமுக்கண் மணிமுன்
விண்ணவர்கள் முப்புரத்தார் செய்கொடுமை விளம்பக்
கண்மணிநீ ருகுப்பவரு கண்மணியைப் பிறவிக்
கடியவினை நோய்கடியு மணியையெணி மகிழ்வாம்
தெண்மணியை விப்பிரர்கள் தேடுசுப்ர மணியைத்
தேவசிகா மணியையடி யார்கள்சிந்தா மணியை
எண்மணிக ளொன்பதிழை மாடமலி கின்ற
எட்டிகுடி வேலவனைக் காவல்செய்க வெனவே. 7

## திருநந்திதேவர்

பாசத் தாம்பிற் பிணிப்புண்டு பயிலும் புலப்புல் லுணவார்ந்து
பராதீ னப்பட் டுளபசுக்கள் பதியாய் மேலாங் கதியுறவே
நேசத் தாலா கமவேத நிகழ்த்துஞ் சுத்தாத் துவிதநெறி
நிகழக் கல்லா னிழலிருந்து நிகழ்த்துஞ் சம்புக் கடுத்தவனுப்
பேசப் படுசீ ருடையானே பிரமன்முதலோர் முடிப்பூவின்
பிரச நாறும் பிரம்பானே பெருமா னந்திப் பெயரானே
வாசக் கமல மலர்மேவு மடவா ரிருநால் வரும்வாழும்
வளமா ரெட்டிக் குடிமருவும் வடிவே லவனைக் காத்தருளே. 8

## வீரபத்திரர்

ஐந்தொழி லியற்றும் பரம்பரற் கன்பிலா
ராற்றுநல் வினைகடாமும்
அவமாவ தன்றியுறு பவமாய்ப் பெரும்பழி
யளிக்குமென் றுலகமறிய
மைந்துடைய மாமடிக ளின்மக மழித்தங்கு
வந்தமா லிந்திரன் முதல்
வானவரி யாவர்க்கு மங்கபங் கஞ்செய்த
வாள்வீர னினிதுகாக்க
வெந்தொழிற் சூரனுட லந்தடிந் தோங்குபெரு
வெற்பைப் பிளந்தலைமிகு
வேலையை யுரிஞ்சவடி வேலையெறி வேலையொரு
விளையாட் டெனக் கொள்வேளை
சந்தமுந் துங்கருணை யருணகிரி நாதன்
தமிழ்க்கவிகள் கிள்ளை யோதத்
தண்கரும் பொன்கண்முத் தந்துளிக் கும்பொழில்
சாரெட்டி குடிமுருகையே. 9

## தமிழ்த்தெய்வம்

திரிபுரமெ ரித்தவிரி சடையிறைவர் சங்கத்
திறற்புலவ ரோடிருந்து
செவ்வனே யாய்ந்தவிய லுடையதா யவர்முனஞ்
செய்தகள வியலுடைத்தாய்
அரியபொரு ளெல்லா மடங்குகுறள் வேதமுட
னன்பர்மொழி திருவாசகம்
அருமறைக ளாகம முடிப்பெளி துணர்த்துசித்
தாந்தநூ லாதி யுளதாய்ப்
பெரியதே வாதிய ருவப்பவின் கவிபாடு
பேரறிஞர் பேணு மமுதாய்ப்
பேருலகி லென்றைக்கு மழியாத தமிழெனும்
பெண்ணணங் கினிதுகாக்க
சீரிய தமிழ்த்தெய்வ மாகிமுத் தமிழினாற்
றிட்டுகினும் வாழவைக்குஞ்
சேந்தனைக் கந்தனை யெட்டிகுடி வேலனைத்
தேவர்கள் சிகாமணியையே. 10

## ௨. செங்கீரைப் பருவம்

மண்ணுலகி லூழின்வழி வருகின்ற சிறுமகார்
வாய்குழறி யோதுகுதலை
மங்கல வழக்கினாற் செங்கீரை யென்றுதமிழ்
வாணர்கள் வழங்குவாரால்
பண்ணுலவு பழமறைக ளின்னமிவ னின்னனென்
பரிசுணர லாகாதவெம்
பரமனிரு செவிகுளிர வுபதேசம் வைத்தநின்
பவளவாய் மழலைமொழிதான்
உண்மையினி லியல்பாம் வழக்கென் றுணர்ந்தியா
முய்யவுன் பாலிரந்தேம்
உள்ளமல மூன்றும்விட் டோடவநு பூதியா
முற்றிட விரங்கிவாய்மைத்

திண்ணமுடை யார்பரவு மெட்டிகுடி வேலனே
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு மெய்ஞ்ஞான பானுவே
செங்கீரை யாடியருளே. 1

உளதெனவு மிலதெனவு முருவெனவு மருவெனவு
மொன்றன் றிரண்டென்னவும்
உடலெனவு முயிரெனவு மைம்பொறிக ளென்னவும்
உணராத பாழென்னவும்
அளவில்வித மாவுலகி லுளறுவன பலசமய
ஆரவா ரத்திலுண்மை
அறியாது பேதுற்ற சிறியோ முளத்துயர்
அகற்றலுன் கடனையனே
களகள வெனக்கரட மழைபொழி பகட்டுருவு
கண்டவந் தகர்சொனம்புங்
கயவர்போ லாகாது மெய்யுணரு மாசையாற்
கந்தனினை வந்தணைசெய்தோம்
திளையவனு பூதியரு ளெட்டிகுடி வேலனே
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு மெய்ஞ்ஞான பானுவே
செங்கீரை யாடியருளே. 2

ஓராலி னிழலிரு மூன்றுபகை யற்றமுனி
வோர்நால்வ ரஞ்சடங்கி
உய்யமா சறுமின்ப மெழுமாறு மோனத்,
துணர்த்தும் பெருங்கடவுளும்
சீராம னும்பொதிய முனியும் பராசரன்
சேய்களிரு மூன்றுபேரும்
சீகாழி வளநகர்க் கண்ணுடைய வள்ளலுஞ்
சிற்றம் பலங்நாடியும்
ஆராத ரத்துன்னை யேபுகழு மருணகிரி
யையனு முதற்பலருமே
அரியபே ரின்பவநு பூதியுற வொருமொழிமு
னருளிய தறிந்தடைந்தேம்

சோாத நிருதர்குல கலகயா முய்யவொரு
செங்கிரை யாடியருளே
செட்டியென வெட்டிகுடி யுற்றவடி வேலனே
செங்கிரை யாடியருளே. 3

உகந்தொறு முயர்ந்தகயி லாயமலை
மீதிலுயர் ஒளிருமணி மண்டபத்தே
ஓங்குமரி யணைமீது புவனமுழு
துடையாளு முடையானு நடுவிருத்தி
முகந்திருத் திக்குழைந் துச்சியை
முகந்துவாய் முத்தாடி மாறிமாறி
முருகவா வென்றெடுத் துத்தோ ளணைத்தோறு
முறுவல்செய் தொழுகுமழலை
அகந்தளிர்ப் பப்பேசு மஞ்சுகப் பிள்ளையே
அடியேங்க ளுஞ்சுகமுற
அருமதலை குதலைமொழி குழறியொன்
ரேதினு லந்நன்றி யென்றுமறவேம்
திகழ்ந்தமண நாறுபொழி லெட்டிகுடி வேலனே
செங்கிரை யாடியருளே
திமிரமல மகலவரு மெய்ஞ்ஞான பானுவே
செங்கிரை யாடியருளே. 4

பூமேவு சரவணப் பொய்கைதனில் வளர்ஞான்று
போற்றுமுடு மகளிர்மகிழப்
புன்முறுவ லுறவோ ரின்மழலை யாயினும்
புகலா திருந்தனைகொலோ
பாமேவு புகழுந்தை யோமொழிப் பொருளைய
பகரென்ற போதிலுன்றன்
பவளவாய் திறவாது கைகாட்டி னுய்கொலோ
பண்ணவர்க ளுண்மகிழவே

நாமேவு சூரனிடு சிறைதவிர்ப் போமென்று
நண்ணியவர் களவின்மொழியும்
நாதனே பழமறைக ளோலிடும் பாதனே
நாதாந்த மானபரனே
தேமேவு பொழில்சூழு மெட்டிகுடி வேலனே
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு மெய்ஞ்ஞான பானுவே
செங்கீரை யாடியருளே. 5

மலரிதழி னளிமொய்த்த தெனவொளிரு மணியாழி
மாட்டிய மலர்க்கையூன்றி
மண்மீதி லொருகான் மடக்கிக் கிடத்தியொரு
மலரடி நிறுத்திவைத்துப்
பலமணிக ளிழைசுட்டி நெற்றியா டக்கருணை
பாலிக்கும் விழிகளாடப்
பவளவித ழிடைமுறுவன் முத்தமா டச்செவிப்
படரொளிக் குழைகளாட
நிலவுவிரி முழுமதிய முகமாட நீபமணி
நீள்வரைத் தோள்களாட
நிசிசரர்கள் திண்டாட வமரர்கள் மகிழ்ந்தாட
நிலமகளி னுதலி னுறுந்
திலகமென வளரெட்டி குடிமுருக குகபகவ
செங்கீரை யாடியருளே
திமிரமல மகலவரு மெய்ஞ்ஞான பானுவே
செங்கீரை யாடியருளே. 6

## வேறு

பாதல மேவுர காதிப ருடப் பாரும சைந்தாடப்
பாரவ ரைக்குல மாடத் திரையெறி பரவை யுயர்ந்தாடப்

போதனு நாமிசை யாளுட னுடப் புயல்வண னுராடப்
பொன்னு டச்சுரர் மன்னு டப்பல பொற்கொடி யாராட
ஆதவ னுடநி லாமதி யாடவு டுக்க ளசைந்தாட
அழகிய கலபநன் மயிலா டத்திரு வருணையி லரசவையில்
சேதொளி யாடமு னுடிவ ருங்குக செங்கோ செங்கீரை
சித்தி யளித்தரு ளெட்டி குடிக்குக செங்கோ செங்கீரை. 7

நெக்குரு கித்தொழு பத்தரு ளத்தி னிமிர்ந்தூ றுந்தேனே
நிச்சய மற்றுழ லற்பரு ளத்தும றைந்தே நின்ருேனே
பக்குவ ருக்கு நினைப்பு மறப்பும றுந்தா டந்தாள்வோய்
பச்சை யிலைக்கல ருக்கு நினைப்புறு மின்பீ யுந்தேவே
கொக்கு வருக்கை பழக்கத லிக்குலை கொண்டா லுங்காநீள்
கொச்சையி லூற்று மறைத்தமி ழைப்பொழி கொண்டால் செந்தூரா
செக்கர்ம ணிப்பிர பைப்பொலி கற்பக செங்கோ செங்கீரை
சித்தி யளித்தரு ளெட்டி குடிக்குக செங்கோ செங்கீரை. 8

எச்சம யத்தவ ருக்குமி லக்கென நின்ருளுந்தேவே
எத்துகு ணக்கல ருக்குணர் வுட்க மறைந்தே நின்ருேனே
பச்சை மறக்கொடி சுற்று புனத்தெளி வந்தே சென்ருேனே
பட்ச மிகுத்தவ ளிட்ட புதுத்தினை மென்றே தின்ருேனே
கச்சை யறுத்த தனத்து மயக்க மிகுந்தா ளென்றேகால்
கட்டி முடிக்கவள் பொற்பதம் வைக்கவுளம் பூணுஞ்சேயே
செச்சை மணத்த கடப்பணி பொற்புய செங்கோ செங்கீரை
சித்தி யளித்தரு ளெட்டி குடிக்குக செங்கோ செங்கீரை. 9

செப்ப முறப்பல லக்கண லக்கிய மோதி லரும்பாவே
செப்பி வழுத்த மனத்துறு பத்திய ராகி னறும் பாகே
ஒப்ப நலத்த தமிழ்க்கவி யெப்புல வோரும் விரும்பாவீ
தொப்ப விசைக்க வெவர்க்குறு மப்பவெ ணுவர நன்கீவாய்

மைப்புய லொத்த உடற்கரு ணைப்புய லார்மரு கெங்கோவே
வச்சிர நற்படை யத்தன் மகட்குள மாலருள் சிங்காரா
அப்ப வெனச்சிவ னைச்சொலு நற்கும ராகுண கெம்பீரா
அற்புத மிக்குள வெட்டி குடிக்குக னாடுக செங்கீரை. 10

## 3. தாலப்பருவம்

கதிரோன் குடபான் மலைமறைந்தான்
ககனத் தடத்தி லுடுவரும்பிக்
கதிர்மா மதிய மலர்பூத்துக்
கமழ்பூந் தென்ற லுலவிடுமால்
முதிரா விளம்பார்ப் பினந்தாயர்
முடங்குஞ் சிறையி லொடுங்கினபூ
முளரிக் கதவ மடைத்துவரி
முழங்கும் வண்டுந் துயின்றனவால்
எதிரா சர்களந் தியின்மறைக
ளியம்பிக் கடன்க ளியற்றியபின்
இதயக் கமலத் துணையிருத்தி
யிமைகள் பொருந்தி யொடுங்கினர்காண்
சதுரா னனனைச் சிறையிட்ட
சதுரா தாலோ தாலேலோ
தமிழா கரவெட்டிக் குடிவாழ்
தலைவா தாலோ தாலேலோ. 1

அங்கத் தொருகூ றமர்ந்தாளு
மரனும் பாகம் வேறாகி
அருமா தவங்கள் செய்தபய
னாக முளைத்த பசுங்குருந்தே
சிங்க முரித்து மேல்போர்த்த
திறலார் சரபத் திளம்பார்ப்பே

செங்கட் கயவாய் மகிடனுயிர்
செற்ற பிணவி னிளங்குருளாய்
கங்கைப் புனலி னிடையெழுந்த
கதிரார் துகிரி னிளங்கொழுந்தே
கமழ்பூம் பொய்கைச் சரவணத்தின்
கண்ணே பிறந்த கதிர்முத்தே
தங்கக் கட்டி யேமணியின்
திரளே தாலோ தாலேலோ
தமிழா கரவெட் டிக்குடிவாழ்
தலைவா தாலோ தாலேலோ. 2

அலையிற் பொலியும் பொய்கையிலே
யசையுங் கமலத் தொட்டிலிலே
அறுமீன் மாத ரொக்கலைமே
லசலாம் பிகையின் மடிமீதே
மலையைச் சிலையாக் குழைத்தபிரான்
மார்பின் மேலே தோண்மேலே
மகிழ்ந்து பொலிந்து வீற்றிருந்து
வளர்ந்து தவழ்ந்து விளையாடித்
துலையிற் பொலியு நாவென்னத்
துளங்கா ருளத்தே களிதூங்கும்
துய்ய ஞான மழகளிறே
துரியங் கடந்த பரம்பொருளே
தலையைக் குனிவார் துயரனைத்துந்
தவிர்ப்பாய் தாலோ தாலேலோ
தமிழா கரவெட் டிக்குடிவாழ்
தலைவா தாலோ தாலேலோ. 3

திருந்தப் புவன மீன்றவடன்
றிருமா முலையுண் டகங்குளிர்ந்து
திரைவா ரிதிநேர் சரவணத்திற்
செவ்விப் பூந்தொட் டினிலமர்ந்து
மருந்தி லினிய வருவர்முலை
மாந்த விரும்பி வாரியழ
வானோர் பகையாஞ் சூரரழ
மாயம் பெருத்த குன் றமழ
விரும்பிப் படைத்த மாயையழ
விம்மி விம்மி யழுங்குழந்தாய்
வேத னழவன் றளைபூட்டி
மிகுங்கா வலிடை விட்டவனே
தருந்தந் தைக்குக் குருமொழிசொல்
சாமீ தாலோ தாலேலோ
தமிழா கரவெட் டிக்குடிவாழ்
தலைவா தாலோ தாலேலோ. 4

அல்லி னிருண்ட வாணவத்தா
லறிவு குருடா மாருயிர்கள்
அனைத்தும் விடய வாரகமும்
அரிய சொரூப வாரகமும்
புல்ல லொழியத் தனுகரண
புவனம் படைத்துக் கொடுத்தளவில்
போக மூட்டி யுலகாசை
போன பின்பு பெருவீட்டில்
தொல்லை யொழிய வைத்தின்பத்
துயிலில் வளர்க்குந் திருவருளாம்
தாயாள் வயிற்றிற் சேயான
சுப்ர மண்யப் பரம்பொருளே

சல்லென் றொலிக்கும் பழையமறைத்
தண்டைத் தாளா தாலேலோ
தமிழா கரவெட் டிக்குடிவாழ்
தலைவா தாலோ தாலேலோ. 5

குஞ்சி திருத்தி நீராட்டிக்
குவளைக் கண்கண் மையெழுதிக்
கொள்ளுங் கலங்கள் பலபூட்டிக்
கொங்கை யருத்தி முத்தாடி
மஞ்சர் நவவீ ரர்க ளுடனே
மறுகிலாட விடுத்துப்பின்
மாலை யயினி நீர்சுழற்றி
மணிப்பூந் தொட்டி லினில்வளர்த்தே
அஞ்சொற் கிளிமா தர்கள்பாட
லன்பாய்ப் பாடித் துயில்வித்தால்
அரசே மழலை பலபேசி
யங்கண் விழித்துக் கிடந்தனையால்
தஞ்ச மடைந்தார் தமக்கெளிய
சாமீ தாலோ தாலேலோ
தமிழா கரவெட் டிக்குடிவாழ்
தலைவா தாலோ தாலேலோ. 6

வேறு

தெண்கிணை கொட்டுந் தண்வயல்
முற்றும் செஞ்சாலிப் பயிர்கள்
செழுமத வாரண மறைய
வளர்ந்து திரைப்புனல் போலலையப்
பண்கள் மிழற்றும் வெண்பா
லுழத்திப் பாவையர் வாழ்சேரி

பரவையி டைச்செறி குறுநில
　　மெனவுழு பகடிரு முகிலென்னத்
திண்கைக் கோலிற் போர்கள்
　　சரிப்போர் திமில்விடு வோரென்னத
செந்துகி ரின்கொடி சங்கொளிர்
　　வெண்டர ளஞ்சொரி யுங்கழனி
தண்கடல் வைப்பொக் குங் குளி
　　ரெட்டிக் குடியாய் தாலேலோ
தமிழ்முனி பரவிய சிவசர
　　வணபவ சண்முக தாலேலோ. 7

அமலே மிகுங்கிணே முழவ மதிர்ந்திட
　　வரியன் மகிழ்ந்துழவோர்
அரிகள் சரிந்துறு தலேகளு
　　திர்ந்திட வாணேப் பகடுய்த்தே
நமர்க ளடுந்தொழில் புரிய
　　விரைந்திடு நாவல் நாவலெனும்
நரலே யெழுந்துயர் ககன
　　மளந்திட நாந்தக நேர்வாளே
குமர ரிரிந்திட வுந்த உறும்பல
　　குருகுக ளிரையாரக்
கொடிக ணிறைந்திட வினேக
　　ணடந்திடு குளிர்பூம் பழனநிலம்
சமர நெடுங்கள நிகரெட் டிக்குடி
　　சார்வேள் தாலேலோ
தமிழ்முனி பரவிய சிவசர
　　வணபவ சண்முக தாலேலோ. 8

துன்று முகிற்கண மின்னுட ஞடுந்
தூய பொன் மாளிகைகள்
துங்கக் கொடியமை துன்றப் பனிமதி
தோயு மிருல்நிகர
வென்றி மிகுங்கொடி வரியரி யடுசின
வேழ நிகர்த்தவர்கண்
மேவிப் பிணைவிழி யார்பச் சிளமயில்
மேனிக் கொடி யிடையார்
என்று மிருப்பது ஞலிமை
யோர்கண மின்பந் துய்ப்பதனுல்
ஏமத் துணையென நீயு மிருப்பத
ஞலிது புளினர்கள் வாழ்
குன்ற மிகுந்திணை யென் றவி
ரெட்டிக் குடியாய் தாலேலோ
குறமகள் கனதன முருவிய
திரள்புய குமரா தாலேலோ. 9

## வேறு

இமய மடப்பிடி பெற்றிடு
களிறே தாலோ தாலேலோ
இபமுக வற்புத னற்புறு
துணைவா தாலோ தாலேலோ
அமரர் தமக்கிறை பெற்றவள்
கொழுநா தாலோ தாலேலோ
அமுத கடற்றுயி லுற்றவர்
மருகா தாலோ தாலேலோ
குமர குருப்பெயர் தக்கவெ
மிறையே தாலோ தாலேலோ

குக வுயிருக்கு ளிருக்குமி
    னுயிரே தாலோ தாலேலோ
சமரச நிச்சய முற்றவர்
    தலைவா தாலோ தாலேலோ
தமிழ்வள ரெட்டிகுடிப் பதி
    முருகா தாலோ தாலேலோ. 10

## 4. சப்பாணிப் பருவம்

பிண்டத்தி லோருயிரிருந்ததை யசைக்கின்ற
    பெற்றிபோ லொருபேருயிர்
பேருலக மேதனது பேருட லெனக்கொண்டு
    பிறழாம லசைவிக்குமிவ்
வண்டத்தி லவனன்றி யணுவுமசை யாதென்னு
    மறிவுசிறி தேனுமின்றி
ஆத்தர் மொழி நம்பாது நாத்திகம் புகல்கின்ற
    வசடர்க ளகன்றுபோமின்
வண்டக் குணத்தரவர் கூட்டத்தை யணுகாது
    மனதுமெய் மொழிகளாலே
வழிபாடு புரிகின்ற வடியார்க ணலமேவ
    வம்மின்க ளென்றல்போலத்
தண்டத் தனித்தொங்க லணிதோள செங்கைகொடு
    சப்பாணி கொட்டியருளே
தருமமிகு மெட்டிகுடி முருகதிரு மருகனே
    சப்பாணி கொட்டியருளே. 1

தருநிழலில் மருவமரர் நெஞ்சுபறை கொட்டிடத்
    தளவநிகர் பற்கள்கொட்டத்
தரியாத வுறுகணா லுறுகணீர் கொட்டிடச்
    சலதியிடை மீன்கள் வாரி

அருகாது கொட்டுகென வாணையிட் டிந்த்ரனரி
யயன்முதலி னோரையெல்லாம்
ஆலைக் கரும்பென்ன வின்னுவிழைத்தடா
வாட்சி புரியவுணர் மடியக்
குருகுடைய அவர்மாதர் மார்கொட்ட வங்கையாற்
கோலமுக மீதுகொட்டக்
குவளைநிகர் கண்கணீர் கொண்டல்போற் கொட்டிடக்
குணங்குவாய்த் தசைகள் கொட்டச்
சருகிலழ லிட்டதென வேல்தொட்ட வீரனே
சப்பாணி கொட்டியருளே
சகலவள நிறையெட்டி குடிமுருக
குகசெட்டி சப்பாணி கொட்டியருளே. 2

திடநிலவு மசுரர்மன நடுநடுங் கத்தோள்க்ள்
சினவிழி யிடந்துடிக்கத்
திராத அவர்காதன் மாதர்மங் கலநாண்
சிதைந்துமுலை மீதுவீழக்
கடனடுவு ளவர்கணக ரினில்வான வில்லிரவு
காணமலர் புலவுநாறக்
கனவுதனி லிரதமொடு குதிரைவர வேறுதீங்
கானவுற் பாதநிகழ
வடகிரியு மிருநாலு குலவரையு மசையநெடு
வஞ்சக்ர வுஞ்சமுலைய
வாரிதி வெதும்பியலை மோதவிண் ணோர்க்கெலாம்
வலதுதோள் விழிதுடிக்கத்
தடவிமய மகள்விழி களிக்கநின் செங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
தருமமிகு மெட்டிகுடி முருகதிரு மருகனே
சப்பாணி கொட்டியருளே. 3

செங்கட் கருங்களத் துத்திப் படத்தரவு
துளையெயிற் றமிழ்துகொட்டத்
தேனெழுக் கென்னவிசை மகிதியாழ் கொட்டத்
திமிந்திமிதி யென்றுவாணன்
அங்கைத் தலங்களோ ராயிரங் கொண்டுமுழ
வண்டமதி ரக்கொட்டிட
அண்டரொடு தொண்டர்விழி கண்டுவகை கொண்டுபே
ரானந்த மாரிகொட்டத்
திங்களமு தங்கொட்ட மதலைபொன் கொட்டவலை
சுரநதித் திவலைகொட்டச்
சிவகாமி யம்மைமகிழ் புன்முறுவல் கொட்டிடத்
திருமன் றி லாடுமிறைவர்
தங்கைத் தலங்கொட்ட நடுமாடு பாதனே
சப்பாணி கொட்டியருளே
தருமமிகு மெட்டிகுடி முருகதிரு மருகனே
சப்பாணி கொட்டியருளே. 4

வேறு

அட்ட திசைக்களி றுட்கவெதி
ரறைவார் குலவரை பந்தெறிவார்
அகில மெடுத்தப.: றலையரவ
மாழி யெனக்கை விரற்புனைவார்
குட்டை யெனக்கட லளறுசெய்வார்
குதிரைக் கனலினை யுஞ்சுடுவார்
கொண்டற் கணமொரு கைப்பிழிவார்
கொடிமின் மாலைபு யத்தணிவார்
எட்டுத் திசைகள் புரப்பவரை
யேவற் கொளுவார் சூரியனை

இதுவோர் தீப்பொறி யென்றிகழ்வா
　　ரிகலான் மிக்கநி சாசரர்கள்
கொட்ட மடக்கிய கதிர்வேலா
　　கொட்டி யருளுக சப்பாணி
கொழிதமி ழெட்டிகு டிக்குமரா
　　கொட்டி யருளுக சப்பாணி. 5

மன்ற நடித்திடு மெம்பெருமான்
　　மலைமா ணைப்புணர் திருநாளில்
வருவா யற்புத முனியேநீ
　　மலையப் பெருமலை யுறுகவெனத்
தென்றிசை சென்றிடு பொழுதிமையஞ்
　　சிறிதென ஓங்கிய விந்தவரைச்
சென்னி மிசைக்கை கவித்ததலஞ்
　　சேர வடக்கிய திறலாளன்
கன்று சினத்தச முகியருமைக்
　　காதல ராகிய வாதாவி
கபடத் தவமுறு வில்வலனைக்
　　காசினி மாசற வேயெளிதிற்
கொன்ற தவக்குறு மாமுனிவன்
　　குருவே கொட்டுக சப்பாணி
கொழிதமி ழெட்டி குடிக்குமரா
　　கொட்டி யருளுக சப்பாணி. 6

வேறு

சஞ்சித மென்றக ளஞ்சிய மொண்டே
　　தானுகர் தனுவயலில்
தண்டா தேவிளை யாகா மியவினை
　　தானுஞ் சஞ்சிதமாய்

எஞ்சுத லின்றி மிகுந்து வருஞ்செய
லென்று குறைந்திடுமோ
என்றுள மஞ்சியு னஞ்சர ணஞ்சர
ணென்றடை யுஞ்சரணர்
வெஞ்சம னஞ்சவி டும்படர் தங்கையில்
வீழா மேஞானம்
விஞ்சமி குந்தரு ளென்றுரு வங்கொடு
விழியெதிர் வந்தவர்தம்
குஞ்சிபு ஊனந்தருள் செஞ்சிறு கையா
கொட்டுக சப்பாணி
கொற்றவை பெற்றரு ளெட்டிகு டிக்குக
கொட்டுக சப்பாணி. 7

வேறு

பிறவிக் கடலி லலைவாரைப்
பேணி யெடுக்குங் கமலக்கை
பெரிய பொருளைத் தெரிவிக்கும்
பெருமைச் சின்முத் திரைச்செங்கை
உறவும் பொருளுந் துறந்தாரை
யுவந்தே யஞ்ச லளிக்குங்கை
உம்ப ரிம்ப ரின்பமெலா
முதவும் விரத வரதக்கை
மறவி நினைவு மில்லாத
வாழ்வார் தலைமேன் மன்னுங்கை
வடிவேல் விளங்குந் தொடிசேர்கை
மாதே கடைக்கண் வழங்குகெனக்
குறவி திருமுன் கூப்புங்கை
கொண்டே கொட்டுக சப்பாணி
குறையா நிறைவே எட்டிகுடிக்
குமரா கொட்டுக சப்பாணி. 8

## வேறு

மச்சத்தி னைச்சுடுச ரத்தைக்க டற்கடுவை
மைப்பான லைப்புரையுநீள்
மைக்கட்க ளிப்பினிலொண் முத்தத்தி னைப்பழிசி
ரிப்பான திற்றுவரினுல்
அச்சத்த மிக்ககட லுக்குட்கி னைத்ததுகி
ரைக்கோவை யொத்தவிதழால்
அட்டுத்து னைப்படன்மு தற்குற்ற மற்ளெரிர
மைத்தோளி னிற்குவடெனுக்
கச்சைக்கி ழித்துநிமிர் செப்புத்த னத்தினின்ம
னத்தாசை மிக்கிதணில்வாழ்
கற்புக்கு றத்தியரு குற்றுத்து தித்துருகு
கைக்கேவ லுக்குவிழைவாய்
சச்சப்பு டத்துருவ மொற்றிப்ப ழக்கனிகர்
சப்பாணி கொட்டியருளே
சற்பத்தி யர்க்குதவு மெட்டிக்கு டிக்குமர
சப்பாணி கொட்டியருளே. 9

## வேறு

மஞ்சிவ ருங்கன குன்றுத டிந்தவ லிக்குலி சப்பாணி
வஞ்சனை மிஞ்சுமி லங்கையெ றிந்தவ னைத்தசி லைப்பாணி
கஞ்சமி ருந்துல கங்கட ருங்கன கக்கர கப்பாணி
கம்பலை யுந்திவ னைந்துல கம்பொதி கைச்சக டற்பாணி
எஞ்சவ ருந்திய புங்கவன் முந்திய நற்றவர் மற்ருேரும்
எங்கள ருந்தவ மென்றுப ணிந்திடு மெட்டிகு டித்தேவ
குஞ்சரி கொங்கைம ணந்தரு ளுங்குக கொட்டுக சப்பாணி
குன்றமெ றிந்தவ கந்தசி வந்தகை கொட்டுக சப்பாணி. 10

## 5. முத்தப் பருவம்

உருகு முளத்தோ டணைத்துமையா
ஞுச்சி மோந்து முத்தாடி
ஊட்ட வுண்ட வபரபர
வோதி மயமாந் தீம்பாலும்
குருகு பரவு சரவணத்திற்
குலவி யறுவர் தாய்மார்கள்
கொடுத்த கொங்கைத் தீம்பாலும்
குடைவார் பிறவி வினைதீர்த்துப்
பெருகு கங்கை யாயிரமாம்
பிரசக் குமுத மலர்வாயிற்
பிறங்கு மமுதுஞ் சிவபெருமான்
பிறழா மறைசொல் வாய்மலரின்
முருகு நாறுஞ் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவு மெட்டிகுடி
முருகா தருக முத்தமே. 1

முத்தி நெறிதேர் முனிவர்க்கு
முனியாங் கல்லா னிழலரசும்
முதிரா வன்பா லவன்றிண்டோள்
முயங்குங் கொடியு மைமைந்தனும்
பத்தி மிகுவெங் குருகூடற்
பதிவா ழிருதம் பதிமாரும்
பரிந்து முலையூட் டியவறுமீன்
பாவை மாருங் குஞ்சரியும்
தத்தி யருவி யிழிபுனவர்
தருமான் அருணைப் பெருமானும்

தரங்கக் கங்கை மானும்வாய்த்
தமைகேட் டியாமும் பெறவிழைந்தோம்
முத்தி தருஞ்சீ ரெட்டிகுடி
முருகா தருக முத்தமே
மும்மைத் தமிழின் பயனுன
முதல்வா தருக முத்தமே. 2

பித்தைத் தருகட் சரமெய்து
பேணு விளைஞர் தமைப்பிடித்துப்
பெருகுங் காம நஞ்சருத்திப்
பிணிக ளுடலிற் புகுத்தியவர்
சொத்தைக் கணத்திற் பறித்தெளிதிற்
றுறவ ராக்குந் திறம்படைத்த
துட்டக் கணிகை மகளிர்மனைச்
சுழன்று திரிந்த வருணகிரி
அத்தைத் தவிர்த்துக் கையறவோ
டாவி விடுக்கத் துணிவுறுகால்
அச்சந் தவிர்த்துத் தொண்டுகொண்டு
னருமைப் புகழைப் பாடுகென
முத்தைத் தருசொற் றருகனிவாய்
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவு மெட்டிகுடி
முருகா தருக முத்தமே. 3

துட்ட மதனைப் பொடிசெய்த
சோதி நயனச் சிவபெருமான்
துலங்கு முகங்க ளைந்தினொடுந்
தோன்று திருக்கு மதோமுகமும்

திட்ட முறக்கொண் டுள்ளவிவன்
தேரி னமக்கு வேறலன்காண்
சிவையே யென்றன் றுமையவட்குத்
தெரித்த சரதந் தேருமல்
இட்ட முடன்கோ ழியைப்பாடி
யிளங்குஞ் சினையும் பாடேனென்
றிசைத்த பொய்யா மொழிப்புலவன்
றிகைக்கச் சுரத்தி னிடைமறித்து
முட்டைப் பெயரிற் கவிகவர்வாய்
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவு மெட்டிகுடி
முருகா தருக முத்தமே. 4

சத்தஞ் சுவையே முதலாகச்
சாரும் புலன்க ளெனும்வேடர்
தங்கள் சீறூ ரிடைவளர்ந்து
தன்னை யறியா மன்னுயிரை
நித்தஞ் சுகத்தில் வைத்திடுவா
னேசித் தடுத்துத் தடுத்தாளும்
நேர்மை யுலக மறிந்துய்ய
நித்தப் பிரம சாரிநீ
கத்துங் கிளிகள் கடிந்தகுறக்
கன்னி யிருந்த தினைப்புனத்தே
காளை வேட னெனச்சென்று
காதன் மொழிந்தங் கவள்செவ்வாய்
முத்தம் பெறவே துடித்தவிதழ்
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவு மெட்டிகுடி
முருகா தருக முத்தமே. 5

சந்தம் பதினு ருயிரஞ்சொல்
சதுர னல்லேன் கீரனலேன்
சங்கத் தவரு ளொருவனலேன்
தண்ட பாணிச் சாமியலேன்
கந்தர் கலிவெண் பாவருளுங்
கனிவாய் மகவல் லேன்போரூர்க்
கவிஞ ரேரேு மார்க்கச்ச
காயன் பகழிக் கூத்தனே
சந்த மறையுந் தமிழுந்தேர்
தன்னே ரில்லாக் குமரகுரு
தாச னேவல் லேனிவர்தாள்
தாங்குஞ் சென்னி யடியேற்கு
முந்தை மறைகள் மொழிகனிவாய்
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவு மெட்டிகுடி
முருகா தருக முத்தமே. 6

வேண்டு மடியார் வேண்டுபவை
வெரும லுதவும் பெருமனென
விளம்பு மருண கிரிநாதன்
மெய்மை நம்பி வேண்டினன்யான்
ஈண்டு நிதியக் குவைவேண்டேன்
எழிலார் மாதர் நலம்வேண்டேன்
இமையோ ரரசா குதல்வேண்டேன்
எதுவும் வேண்டா நலம்விழைந்தேன்
ஆண்டா யுன்றன் றிருநாமம்
ஆரா வன்பாற் சொலவிழைந்தேன்
அடியா ரேவல் செயவிழைந்தே
னவையீந் தருளத் தாமதித்தால்

மூண்ட விழைவுக் கிரங்கியொரு
முத்தந் தருக முத்தமே
முத்தர் பரவு மெட்டிகுடி
முருகா தருக முத்தமே. 7

வேறு

குத்திப் பொருப்பையெறி சத்திச் சமர்த்தகமழ்
குமுதவாய் முத்தமருளே
கொத்துப் படப்பணியெ டுத்தப் பரிக்கண்வரு
குமரவாய் முத்தமருளே
நத்துக் கரத்தர்மரு கக்கற் பகக்கனிநின்
நளினவாய் முத்தமருளே
நக்கர்க் குமெய்ப்பொருள்வி ரித்துச்சொலற்குவிரி
நலமுள்வாய் முத்தமருளே
பத்தர்க் குணித்தமுமி னிப்புற்ற புத்தமுத
பவளவாய் முத்தமருளே
பச்சைக் குறத்தியித ழிச்சித் தெழுச்சியுறு
பழுதில்வாய் முத்தமருளே
வித்தைக் கடற்குள்முழு கிக்கைக் கொள்முத்தனைய
விமலவாய் முத்தமருளே
மெய்ப்பத் தரெப்பொழுது மெச்சுற் றவெட்டிகுடி
விரகவாய் முத்தமருளே. 8

வேறு

மந்திர தந்திர முங்கலை யும்பகர்
வுற்றவி ழுப்பொருளே
வஞ்சனை யுங்கொலை யுங்கள வுந்தவி
ருற்றவர் நற்றுணையே

மைந்தெழில் விஞ்சிய வண்டர்கு லங்கள்செ
 ழிப்பவ ளிப்பவனே
வண்டள வந்துள வங்கம லங்கமழ்
 பத்மப தத்தரசே
சந்தன முங்கணி யுங்குர வும்பொலி
 வெற்பிலி ருப்பவனே
சங்கரர் சங்கரி மைந்தவ ளஞ்செறி
 எட்டிகு டிக்குமரா
முந்தவ டைந்துவ ணங்கின மிங்கொரு
 முத்தம ளித்தருளே
முண்டக மென்குமு தம்பவ ளம்பொலி
 முத்தம ளித்தருளே. 9

### வேறு

வெட்டிக் கொடியவர் குலகாலா
 விம்பவொண் முத்தந் தருவாயே
வெற்றிச் செயலினின் மிகுவேலா
 விஞ்சொளி முத்தந் தருவாயே
கட்டிக் கனியினு மினியோனே
 கஞ்சவொண் முத்தந் தருவாயே
கர்த்தற் கொருமொழி பகர்வோனே
 கண்டெனு முத்தந் தருவாயே
செட்டிக் குடியினில் வருவோனே
 செந்துகிர் முத்தந் தருவாயே
தித்திக் குமொழிசொ லுமைசேயே
 செங்கனி முத்தந் தருவாயே
எட்டிக் குடியமர் முருகோனே
 யிங்கொரு முத்தந் தருவாயே
இச்சைப் படியருள் தருவேளே
 இன்புள முத்தந் தருவாயே. 10

## ௬. வருகைப் பருவம்

வெம்பிறவி வேனிலொழி முகில்போ லிருண்டகுழல்
முன்னெற்றி மீதிலசைய
வெண்ணீறு திலகமுடன் இலகுபிறை நெற்றிமேல்
மிளிர்மணிச் சுட்டியிலகச்
செம்பதுமை கேள்வன்மல ரோன்முதற் றேவர்செயல்
செவ்வியழி யாமலருளுந்
திருவிழி மணிக்கடையி லருளலைக ளோங்கிடத்
திண்டோளி லாரமாட
மொய்ம்புவரை வரைநீண்ட வரைமார்பி லருணகிரி
முத்தமிழ்த் தொடையலாட
மொகுமொகென வரைமணிகள் ஒலியிட வருட்சத்தி
முழுஞான வேற்கைமிளிர
வம்புலவு செம்பதும மலரடியின் மணம்வீச
வந்தருள்க வந்தருள்கவே
வளரெட்டி குடிவேல சிவைபெற்ற சிறுபால
வந்தருள்க வந்தருள்கவே. 1

### வேறு

இன்னம் புலன்க ளடங்காமல்
இச்சை நெறியே யுழல்கின்ற
ஈன ரிவர்கண் ணெதிர்வந்தால்
எதுகேட் பாரோ வெனநினையேல்
பொன்னம் புயமா ளிகைவேண்டேம்
பொங்கு மரவி னணைவேண்டேம்
பொருநாற் கோட்டுக் கரிவேண்டேம்
பொருவி லிருநன் னிதிவேண்டேம்

பின்னும் பிறவி வரினுமிளம்
பெருமா னுனது சரணமலர்
பிரியா தெளியே முள்ளத்துப்
பிறங்கும் வரமே பேணினம்யாம்
முன்னம் புளினர் மடமானை
முயங்குங் களிறே வருகவே
முனிவோர் பரவு மெட்டிகுடி
முருகா வருக வருகவே. 2

நெஞ்சா லுனது செஞ்சரண
நிமல மலரே நினைந்துருகி
நிகரில் ஞானத் தமிழ்ச்சந்த
நின்று ளிணைக்கே வணைதொழிலன்
மஞ்சா ரருண கிரிநாதன்
வழுத்து மதல சேடனெனும்
வழுவாப் பாவை நவின்றுன்னை
வரச்செய் திடுவே மப்பாவைத்
தஞ்சா மதிக்க கிற்பாயோ
தமிழுக் கிரங்கும் பெருமானே
தானே வாரா யெனின் மயிலின்
சந்த விருத்த மோதிடுவேம்
அஞ்சா தெடுத்து வருங்கண்டா
யயில்வே லரசே வருகவே
அடியார் குடியா மெட்டிகுடி
யானாய் வருக வருகவே. 3

உருகி யுருகி யுடல்புளகித்
துரைகள் குழறி விழியருவி
ஓட வன்பாய் உன்னுமவ
ருள்ளத் தூறும் தெள்ளமுதே

பருக வினிய பரங்கருணைப்
பரமா னந்தப் பெருங்கடலே
படிற்றுப் புலவே டர்க்கிடைந்தார்
பதுங்குஞ் சேமப் பருப்பதமே
கருவி கரணங் கழன் றறிஞர்
காணும் சுகசிற் ககனமே
கடிய மலமாங் காரிருளைக்
கடியு ஞான தினகரனே
முருக நாமந் தனக்குரிய
முதல்வா வருக வருகவே
முனிவோர் பரவு மெட்டிகுடி
முருகா வருக வருகவே. 4

மண்மேல் மனித உடம்பெடுத்து
மயங்கு வேனைப் பேரருளால்
மானைக் காட்டி மான்பிடித்தல்
மான வந்தாட் கொளுங் குருவே
பண்மேம் படுசெந் தமிழ்ப்பயனே
பழைய மறையின் விழுப்பொருளே
பரவு மடியார் விழைபவெலாம்
பரிந்தீந் தருள்கற் பகதருவே
கண்மேற் கண்கொள் செங்கரும்பின்
கண்ணில் முளைத்த கதிர்மணியே
கனக மலையில் வளர்பச்சைக்
கவினுர் கொடியி னறும்பூவே
விண்மே லமரர் சூழமயின்
மீதே விழிமுன் வருகவே
விளங்கும் வளஞ்சா லெட்டிகுடி
வேளே வருக வருகவே. 5

மலையின் முழையிற் கற்கிமுகி
வைத்த சிறையி லுறுகீரன்
வழுத்து முருகாற் றுப்படைக்கு
மகிழ்ந்து கருணை வழங்கியதும்
உலையின் மெழுகொத் துளமுருகி
உருகி முருகா என்றோதும்
ஒருத் தமியாள் வெட்டியகை
உதவ முன்வந் தருளியதும்
நிலையு மன்பாலுன்னை
நினைவார் பெறுஞ்சீர் பற்பலவு
நெஞ்சந் தேறி நின்சரண
நிமல கமல நினைவானேன்
அலையு மடியேன் விழிகாண
வயில்வே லரசே வருகவே
அடியார் குடியா மெட்டிகுடி
அறுமா முகவ வருகவே. 6

கமழும் பனிநீர் முழுக்காட்டிக்
கவனீற் றுப்புண் டரந்திட்டிக்
கத்தூ ரியினிற் பொட்டிட்டுக்
கருங்குஞ் சியின்மா மலர்சூட்டிக்
முமலங் கெடுத்தின் னருள்கொடுக்கும்
முளரி விழிக்கஞ் சனமெழுதி
மொய்ம்பு மலையி னறுங்கலவை
முழுகப் பூசி முலையூட்டிச்
சமயங் கடந்த திருவடிக்குத்
தண்டை சிலம்பு முதலாய
சவியா பரணந் திருமேனி
தன்னில் விளங்கும் படிபூட்டி

அமையத் திருவீ தியிலுன்னை
அழைத்துப் போவேன் வருகவே
அடியார் குடியா மெட்டிகுடி
யறுமா முகவ வருகவே. 7

விண்ணோ ரமுதுஞ் சுவைகுறைய
விளம்பும் புலவர் கவிகேட்பேம்
வீணை முதலாம் கருவியொடு
மிழற்று மினிய இசைகேட்பேம்
பண்ணார் பழைய மறைநால்வர்
பாடுந் தமிழ்மா மறைகேட்பேம்
பழுதில் சைவ சிந்தாந்தப்
பனுவ லறிஞர் மொழிகேட்பேம்
எண்ணான் குடனா லையுங்கடந்த
இடத்தே இருந்த பெரும்பொருளோ
டிரண்டற் றொன்று மோனியர்க
ளிசைக்கு மனுபூ தியுங்கேட்பேம்
அண்ணால் அழைத்துச் செல்வேனான்
அருளா ரமுதே வருகவே
அடியார் குடியா மெட்டிகுடி
யறுமா முகவ வருகவே 8

வேறு

பரிந்தசெஞ் சுடரின் பிழம்பென வருக
பசுங்கடற் பரிதிபோல் வருக
பைம்புயல் மின்னின் சுழுவென வருக
பவளத்தின் குழவிபோல் வருக
விரிந்தபே ரொளிப்பொன் கலந்தசிந் துரத்தின்
மிகுகுவை போலிவண் வருக

விலையிலா மணியின் திரளென வருக
விளங்கெழி லரசென வருக
தெரிந்தநான் மறையின் முடிபுணர் அறிஞர்
செய்தவப் பேறென வருக
திகழ்சிவ ஞான போதநன் னெறியோர்
சேரநு பூதிபோல் வருக
அரிந்தமன் அயனிந் திரன்முத லமரர்
அதிபதி வந்தருள் செயவே
அணிபொழி லெட்டிக் குடியமர் முருகா
அறுமுகா வந்தருள் செயவே. 9

வேறு

முத்தமிழ் வித்ஃவி நோதா வருக வருகவே
முட்டையெ னற்குள நாளுய் வருக வருகவே
முத்திகொ டுத்தருள் தாளா வருக வருகவே
முக்கணர் மெச்சிய பாலா வருக வருகவே
தத்துவ முற்றுமு ளானே வருக வருகவே
சத்திகை யிற்கொள்கு மாரா வருக வருகவே
எத்தவ ருக்குமு ளுவாய் வருக வருகவே
இச்சைமு டித்தருள் வோனே வருக வருகவே
எத்தர்த மக்கரி யோனே வருக வருகவே
எட்டிகு டிப்பதி வேளே வருக வருகவே. 10

## 7. அம்புலிப் பருவம்

விண்ணவர் மதிக்கவமு தருவமாய் வருதலான்
வியோமத்தி னிலவிடுதலான்
மெய்யமர் வியன்கலை விளங்கலாற் கங்கைதலை
மேவுமருண் மலைமேவலாற்

கண்ணமரு மொருமானை மேவியுல குக்கெலாம்
கலவிநல மீந்திடுதலாற்
கனகிநறு மாலையணி யனகனழ கேசுரன்
கட்பொறியெ னப்பொலிதலான்
எண்ணரு முயிர்ப்பயிர் தழைப்பவமு தீதலான்
ஏறிமே டத்தின் வரலான்
இரவலர் களைப்புரந் திடுதலான் நீயிவற்
கிணையிவ னுனக்கிணையுளான்
அண்ணலெட் டிக்குடியி லமருமுரு கையனுட
னம்புலீ ஆடவாவே
ஆரணம் பரவுதிரு நாரணன் மருகனுடன்
அம்புலீ ஆடவாவே. 1

ஓங்கலை இடங்கொண் டெழுந்தோகை மேலாகி
யுலகைவல மாகவருவாய்
உற்றிடு கணங்கள்புடை சுற்றமிளிர் வாய்கலைகள்
ஒண்புலவ ருக்குதவுவாய்
தாங்குமெழில் வள்ளிக்கு மாரன் சினந்தெயும்
சமயத்தி லுதவிசெய்வாய்
சலசத்தி யொடுமதிக் கின்றவிண் ணோர்கள்பரி
தாபமற வந்தளிப்பாய்
வாங்குமுட லோடுவா னத்துநரை யாய்க்குறை
மதியனென மாதரேச
மாசஞ் சலஞ்செய்து குறையுறுவை யிவனிந்த
வாறுனக் கொப்புடையவ
னுங்குறைக ணீங்கவரு ளெட்டிகுடி வேலனுட
னம்புலீ ஆடவாவே
ஆரணம் பரவுதிரு நாரணன் மருகனுட
னம்புலீ ஆடவாவே. 2

சோமனென் கின்றபேர் கொண்டுமா ஞகஞ்
சுமந்துசிவ னென்னநின்ருய்
தூயவட திசையிறைவ ஞகிக் குபேரஞந்
தொடர்பிஞற் ருேழஞுய்
மாமனுத வியமாதர் பலரையு மணந்தென்று
மாருத உறவுமாஞய்
மன்னிரா மன்கலய னென்னுநா மங்களால்
மலரடித் தொண்டஞய்
பூமஞ ரணனறிய வரியமுடி யடிகண்ட
பூதியால் ஞானியாஞய்
பூழியர்கள் குலமுதல்வ ஞதலான் மரபிற்
பொருந்துமுன் ஞேனுமாஞய்
ஆமிதா லறுமுகச் சிவனழைத் தான்விரைந்
தம்புலீ ஆடவாவே
அட்டதிசை யும்பரவு மெட்டிகுடி வேலனுடன்
அம்புலீ யாடவாவே. 3

நஞ்சிஞெடு வருமமுத முண்டமர ரென்றுபேர்
நண்ணுகினும் விண்ணுளோர்கள்
நாசமுறு வாரெனற் கிசன்முடி மீதுள்ள
நகுதலை சிறந்த சான்ரும்
துஞ்சிடல் பிறந்திடல் வளர்ந்துதேய்ந் திடலென்ற
துன்பமொடு கொடியகயநோய்
தோய்ந்துழீ பணிப்பகை யடிக்கடி விழுங்கவரு
தொல்லையும் படுகின்றனை
கஞ்சனை முனிந்தந்த கனையுதைத் துக்கலக
காமனை யெரித்து நஞ்சங்
கண்டந் தரித்தபெரு மானரு ளுருக்கொண்டு
கந்தனென வந்துநின்ருன்
அஞ்சுமுக நீங்கவெழி லாறுமுக சிவனிவஞெ
டம்புலி ஆடவாவே
அட்டதிசை யும்பரவு மெட்டிகுடி வேலனுடன்
அம்புலி ஆடவாவே. 4

கலகவிழி மாதர்தரு கலவிநசை யாலணுகு
கடியகொடு நோய்கழன்றுட்
களங்கம தொழிந்துகுறை யாதகலை நிதியெனக்
கவிராசர் புவிராசர்கள்
தலைவணங் கச்சித்தி பெற்றுய்ய லாமெங்கள்
தலைவனரு ளருணகிரியே
தக்கசான் றும்உனை விழுங்குபாம் புன்னருகு
சாராது தரணிதாங்கும்
பலதலைய பாந்தளை யெடுத்துதறி யார்க்கும்
பசுங்கலப மயிலி வணதாம்
பகலிரா வென்னும் பகுப்பற்ற நிலையிற்
பரானந்த வமுதாரலாம்
அலகில்புக ழெட்டிகுடி மருவுமுரு கையனுட
னம்புலீ ஆடவாவே
ஆரணம் பரவுதிரு நாரணன் மருகனுட
னம்புலீ ஆடவாவே. 5

பூதகா யத்துப் பொருந்தியுளை நீயிவன்
புனிததக ராலயத்தான்
பொன்றுறுஞ் சிலகலையை நீயிவன் கலையெலாம்
போற்றிடுங் குரிசிலாகும்
மாதமொரு நாணிறைவு மேவுவாய் குறைவிலா
மாநிறை வுளானிவன்காண்
மாசுணங் கண்டஞ்சு வாயிவன் பரிகண்டு
வாசுகியுமுள்ள மஞ்சும்
ஆதவற் கொளிமங்கு வாயிவன வன்பகை
யழித்தவன் வணங்குமுன்னோன்
ஆனைமுக னார்சாப மேவினை அவன்றுணையி
னான்மாதை யிவன்மணந்தான்
ஆதலி னிவற்குநீ யிணையாவை யோகடுகி
அம்புலீ ஆடவாவே
அட்ட திசை யும்பரவு மெட்டிகுடி வேலனுட
னம்புலீ ஆடவாவே. 6

